

# திருக்குறள்

**உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்.** *(வாய்மை 294)*

மனம் அறிந்து பொய்மைக்கு இடம் தராது வாழ்வான் உலக மக்கள் அனைவருடைய நெஞ்சிலும் நிறைந்திருப்பான். சான்றோர் பலர் சான்று.

உரை: **கவிஞர் சிற்பி**

# ஆசிரியர் பக்கம்

## தமிழ்ஆய்வுச் சாதனையாளர்கள்!

தமிழ்நாட்டின் வரலாற்றினை எழுதி வைத்துள்ளவர்களுள் சில பேரறிஞர்கள் வெளிநாட்டினர் என்பது நம்மில் பலருக்குத் தெரிந்திருக்கலாம். அகஸ்டஸ், தாலமி, பிளினி, யுவான்-சுவாங் மற்றும் பல பயணிகள், வணிகர்கள், அரசவைத் தொடர்பாளர்கள் எல்லாம் அவரவர் பார்த்தறிந்த தமிழகத்தைப் பற்றி குறித்துவைத்துள்ளனர். அதேபோல மதபோதகர்களாக வந்து தமிழ்மொழியைப் பயின்று ஆய்வுகள் செய்ததோடு, படைப்பிலக்கியங்களையும், இலக்கணநூல்களையும் படைத்துள்ள தமிழ் ஆர்வலர்கள் கால்டுவெல், வீரமாமுனிவர், ஜி.யு.போப் போன்ற தமிழறிஞர்களையும் நாம் மனதில் நிறுத்திப் பாராட்ட வேண்டும். வெளியிலிருந்து வந்தவர்கள் நம்மை வியந்து பார்க்கும் பார்வை நம்முடைய அன்றாட சொந்தப் பார்வையைவிட வித்யாசமானது – புதிய அர்த்தம் கொண்டது. அதுவும் மொழி, வரலாறு, தொல்லியல்துறை ஆய்வாளர்கள் நுணுகி நுணுகிப் பார்த்து மற்றவர்களின் ஆய்வுகளுடன் ஒப்பிட்டுத்தரும்போது நமக்கு நம்மைப் பற்றிய புது வெளிச்சங்கள் கிடைக்கின்றன.

அண்மைக்காலத்தில் அப்படிப்பட்ட பேராய்வாளர்கள் இருவரைப் பற்றித் தெரிந்துகொண்ட சில தகவல்களை இம்மடல்வழி, உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் 'படித்தேன் பகிர்ந்தேன்' என்று குதூகலிக்கிறது எம் எளிய மனது!

ஒருவர் ஜப்பானியர் - 1933 இல் பிறந்து 2015இல் மறைந்த **நொபோரு கராஷிமா** ஆவார். தென் இந்திய வரலாற்றில் ஆர்வம் காட்டிய வரலாற்றறிஞர். கல்வெட்டுகளைப் பதிவு செய்து தென்னிந்தியாவின் இருண்ட காலத்தினுடைய வரலாற்று ஏடுகளை வெளிச்சப்படுத்தியவருள் பேரிடம் பெற்றுள்ள பேராசிரியர். நொபோரு கராஷிமா தமிழரின் வாழ்வியலை நன்கு கற்றறிந்தவர். 1989 முதல் 2010 வரை IATR எனும் அனைத்துலகத் தமிழ் ஆய்வு மன்றத்தின் தலைவராகப் பணியாற்றிய தமிழ் ஆர்வலர். மேலும் 1995-இல் தஞ்சையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டை முன்னின்று நடத்திய பெருமைக்குரியவர். இந்திய அரசின் பத்மஸ்ரீ விருதினை அன்றைய பாரதப்பிரதமர் டாக்டர் மன்மோகன்சிங் டோக்கியோ சென்றிருந்தபொழுது 2013 இல் கராஷிமாவிடம் நேரில் வழங்கிக் கௌரவித்தார்.



நொபோரு கராஷிமா

நெருக்கமான தென் இந்திய வரலாறு பிரச்சனைகளும் விளக்கங்களும் எனும் ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு நூலினை நொபோரு கராஷிமா ஆங்கிலத்தில் தொகுத்துள்ளார். அதனைத் தமிழில் முனைவர் ப.சண்முகம் மொழியாக்கம் செய்துள்ளார். அருட்செல்வர் நா.மகாலிங்கம் மொழிபெயர்ப்பு மையத்தின் வெளியீடு. கவிஞர் முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்கள் பதிப்பாசிரியர். அருமையான தமிழ்ஆய்வுநூல் உருவாக்கம் பெற்று

# அன்னையின் பிரார்த்தனை



*திவ்ய அன்பின் வெற்றிச் சக்தியே, நீயே இப்பிரபஞ்சத்தின் தனி நாயகன், அதைப்படைப்பவனும் நீயே, நீயே அதைக் குழப்பத்தினின்று தோன்றச்செய்தாய், இப்பொழுது நீ அதை சாசுவதமான இலட்சியத்திற்கு வழிநடத்திச் செல்கிறாய். மிகத் தாழ்வான பொருளிலும் நீ ஒளி வீசிக்கொண்டிருப்பதைக் காண்கிறேன். வெளித்தோற்றத்தில் நின் சித்தத்திற்கு நேர் விரோதமாக உள்ள ஜீவனிலும் நீ வதிந்து செயல்பட்டு கதிர் வீசுவதை நான் உணர்கிறேன். என் இனிய நாதனே, இவ்வன்பின் சாரமே, நான் நின் இதயமாவேன். நின் அன்பின் தாரைகள் என் ஜீவன் முழுவதினூடும் சென்று வெளியே பாய்ந்து எல்லாப் பொருள்களிலும் நின் அன்பை விழித்தெழச்செய்கிறது. அல்லது இப்படிச் சொல்லலாம், எல்லாவற்றிற்கும் உயிரூட்டும் நின் அன்பை உணரும் உணர்விற்கு எல்லாப் பொருள்களையும் விழித்தெழச் செய்கிறது.*

*உன்னைக் கண்டுகொள்ள முடியாதவர்களையெல்லாம், நினது இனிய, திவ்ய தர்மத்தினின்று விலகிச் செல்ல முயல்வோரையெல்லாம் என் அன்புக் கரங்களால் அணைத்துக்கொள்கிறேன். என் அன்புள்ளத்தில் அவர்களைத் தாலாட்டுகிறேன். நின் அற்புதப் பிரவாகம் அவர்களை ஊடுருவிச் சென்று நினது பேரின்பத்தில் அவர்களை மாற்றிவிடும்படிக்கு நினது திவ்ய தீச்சுவாலைகளுக்கு அவர்களை அர்ப்பணிக்கிறேன்.*

**ஸ்ரீஅன்னை**

நமக்கு உறவுப்பாலமாக விளங்குகிறது. 2018 இல் வெளியிடப் பெற்றுள்ள இந்நூலின் விலை ரூ.700.00 நொபோரு கராஷிமாவைப் பற்றிய விவரங்களும் அவரது ஆய்வுக் கட்டுரைகளும் அற்புதமாகப் பதிவாகியுள்ளன.

நாம் பேசவிருக்கும் மற்றொரு பேராசிரியர் ரஷியர். பெயர் அலெக்ஸாண்டர் மிகைலொவிச் துபியான்சுகி – 1941 இல் பிறந்து 2020 நவம்பர் 18இல் மறைந்தார். மாஸ்கோ பல்கலைக் கழகத்தில் தமிழ் மற்றும் இந்திய இலக்கியப் பேராசிரியராகவும், தமிழ்மொழித் துறைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். ரஷிய மாணவர்களுக்கு மிகுந்த ஆர்வத்துடன் தமிழ்மொழியைக் கற்பித்தார். உலகில் மொழியியல் சார்ந்த கருத்தரங்குகள் எங்கு நடந்தாலும் அங்கெல்லாம் சென்று உலகின் மூத்த செவ்வியல் மொழியான தமிழின் சிறப்புகளைத் தகுந்த சான்றுகளுடன் நிறுவுவார். சில ஆண்டுகளுக்கு முன்னால் கோவையில் நடைபெற்ற செம்மொழி மாநாட்டில் தொல்காப்பியம் பற்றிய ஆய்வுக் கட்டுரையை வழங்கியுள்ளார். ரஷ்ய மொழியில் தமிழ் இலக்கியங்களை அறிமுகம் செய்துள்ளார் என்பதும் கூடுதல் சிறப்பு. துபியான்சுகி தமிழ்மொழி ஆய்வுக்கும் ரஷிய மொழித்துறைக்கும் அன்புப் பாலமாக விளங்கினார். அவர் இன்று இல்லை என்பது நமக்கு வருத்தமளிக்கிறது; கொரானோ தொற்றுமேல் கோபம் கொப்பளிக்கிறது. துபியான்சுகியின் தமிழ்ப்படைப்புகள், மொழிபெயர்ப்புகள் பற்றி மேலும் விவரங்களை நமது பல்கலைக் கழகங்கள் தொகுத்தளிப்பது நம்மவர்க்கெல்லாம் ஒரு கண்திறப்பாக இருக்கும். சரிதானே தோழர்களே!.



அலெக்ஸாண்டர்
மிகைலொவிச் துபியான்சுகி

பிறநாட்டார் செம்மொழித் தமிழ் மீதும் தமிழ்நாட்டின் மீதும் காண்பித்துவரும் அளவற்ற அக்கறை, நம் நாகரிகம் உலக நாகரிகத்தின் அச்சாணி என்பதை மரியாதையுடன் வெளிப்படுத்துகிறது. அதே மேல்நிலைச் சிறப்பினை நாமமது தமிழரெனக் கொண்டிங்கு தமிழகத்தில் வாழும் நாம் ஏற்புடைமை பெற்றிலங்குகிறோமா என்பது கேள்விக்குறியாக உள்ளது அல்லவா? தமிழ்நாட்டில் தமிழ்க்குழந்தைகளைத் தமிழில் படிக்க வைக்க ஆர்வமுறுவோர் எங்கிருந்தாலும் அத் திக்கு நோக்கி இருகரம் கூப்புகிறேன். ஜூன் மாதம் முதன்முதலாகப் பள்ளிக்குச் செல்லும் பிஞ்சுக்குழந்தைகளைத் தமிழில் வாழ்த்துகிறேன்.



.வணக்கங்களுடன்
இரா.மீனாட்சி.

## கோடைமுகாம்

### பயனாளிகள் (10 வயது முதல் 14 வயதுவரை) சுற்றுலா அனுபவம்



மே-29 சனிக்கிழமை காலையில் நாங்கள் இளைஞர்கள் கல்வி மையத்திலிருந்து மூன்று குழுவினராக எங்கள் கேப்டன்களின் பாதுகாப்பில் பூத்துறை அருகில் உள்ள ஆரோவில் ஆரண்யா வனம் சென்றோம். (SAIIER) சையர் பேருந்தில் 25 பேர் பயணம் செய்தோம்.

ஆரண்யா வனம் பெரிய பரப்பில் உள்ளது. அதன் பொறுப்பாளராக உள்ள திரு. சரவணன் ஐயா, அவரது மனைவி திருமதி வத்சலா மகள் நற்செல்வி அக்கா எங்களை அன்புடன் வரவேற்றனர். காடு முழுதும் சுற்றிப்பார்த்தோம், சரவணன் ஐயா வழிகாட்டுதலில் நிறைய நம் நாட்டு மரங்களான வேங்கை, கருங்காலி, செஞ்சந்தனம் ஆச்சா, குந்துமணி எல்லாம் பற்றி தெரிந்துகொண்டோம்.

மதியம் நல்லுணவு சாப்பிட்டோம். குழுவிளையாட்டுகள் விளையாடினோம், மரவீடு பார்த்து மகிழ்ந்தோம்.

மேலும் ஆரண்யா வனத்திற்கு வந்து செல்லும் பறவைகள், இங்கேயே வசிக்கும் விலங்குகள் பற்றிய ஆவணப்படத்தை சரவணன் ஐயா போட்டுக்காட்டி விளக்கம் அளித்தது அருமையான நிகழ்ச்சி.

எங்களுடன் ஆனந்து அண்ணா, அய்யனார் அண்ணா, மீனாட்சி அக்கா, சுஹாசினி அக்கா, ஓவியர் பூஜாஅக்கா, கைத்தொழில் ஆசிரியை பிரபா அக்கா எல்லாம் கலந்துகொண்டு பலவகையான பாடல்களையும், விளையாட்டுகளையும் கற்றுக்கொடுத்தார்கள். மாலையில் வீடு திரும்பும்போதும் மனதில் வனமே நிறைந்திருந்தது. மீண்டும் செல்லவேண்டும் என்ற ஆர்வமே மேலோங்குகிறது. ஆரண்யா வனம் மேலும் செழித்து ஓங்க நாம் என்ன செய்யலாம் என்று நாங்கள் கலந்து ஆலோசிக்கிறோம்.

நேத்ரா, ரிஷி, ஹபிஷா, திவ்யா, ப்ரீதம், பாவனா.
கோடைமுகாம் பங்கேற்பாளர்கள்.

# மலைக்கிராமத்தில் ஒரு வித்தியாசமான பள்ளிக்கூடம்

கோவை நகரின் மேற்கே "ஆனைகட்டி" என்னும் மலைக்கிராமம். இது தமிழக, கேரள மாநிலங்களின் எல்லைப் பகுதியாகவும் உள்ளது. சுற்றிலும் மலைகள் சூழ்ந்து, பசுமையாக இருக்கும் பிரதேசம். இங்கு வித்யாவனம் என்ற பள்ளி செயல்படுகிறது. இதில் மலைக்கிராமத்துப் பழங்குடியின மக்களின் சிறார்கள் கல்வி கற்று



வருகின்றனர். வழக்கமான பள்ளிகள்போல் இல்லாமல் மிகவும் வித்தியாசமான முறையில் கல்வியை வழங்கி வருகிறார் பிரேமா ரங்காச்சாரி என்னும் ஆசிரியை!

இந்தப் பள்ளியில் விசாலமான மைதானம், வகுப்பறைகள், நூலகம், கம்ப்யூட்டர்அறை, கைவேலைப்பாட்டு அறை, உணவருந்தும் கூடம் என்று நகரங்களில் கிடைக்கும் பல்வேறு வசதிகளையும் காண முடிகிறது. இதற்கான இடத்தை "அர்ஷ வித்யா" குருகுலத்தை நடத்திய தவத்திரு தயானந்த சரஸ்வதி அவர்கள் வழங்கியுள்ளார்கள். திருமதி. பிரேமா ரங்காச்சாரி அவர்கள் கல்விப்பணியில் நீண்டகால அனுபவம் பெற்றவர். இவரது தாயார் பெயரில் புவனா பவுண்டேஷன் என்ற நிறுவனத்தைத் தொடங்கி அதன் மூலம் இப்பள்ளியை நிர்வகித்து வருகிறார். இந்தப்பள்ளி 2007-இல் 40 குழந்தைகளுடன் தொடங்கப்பட்டது. 2022இல் 400 பேர் படிக்கின்றனர். இதில் 125 பேர் பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர்கள், இங்குள்ள மக்களில் பெரும்பாலோர் இருளர் இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் காட்டுப் பகுதிகளில் சிறு விலங்குகளை வேட்டையாடியும், நிலத்தை உழுது பயிர்த்தொழில் செய்தும் வாழ்பவர்கள், பெரும்பாலும் படிப்பறிவு இல்லாதவர்கள்.

பள்ளிக்கு வரும் குழந்தைகளுக்குப் பாடப்புத்தகங்கள், வீட்டுப்பாடம் எழுதுவது போன்ற எந்தச் சுமையும் கிடையாது. மாணவர்களுக்கு மதிப்பெண்கள் வழங்கப்படுவதில்லை. தேர்ச்சி முறையும் ஆரம்பத்தில் கிடையாது. எந்த ஒரு பாடம் எடுப்பது என்றாலும் அதனைப்பற்றிய ஆழ்ந்த அனுபவ ஞானத்தை அவர்களாகவே கற்றுக்கொள்வதற்கு ஆசிரியர்கள் உதவுகின்றனர். இதனால் படிப்பதில் களைப்பு அடையாமல் பிள்ளைகள் ஆர்வத்துடன் பல விஷயங்களைக் கற்றுத் தேர்ச்சி பெறுகின்றனர். இது தவிர ஓவியம், கைவேலைப்பாடுகள் போன்றவற்றையும் கற்றுக் கொள்கின்றனர்.

எட்டாம் வகுப்பு வரை இதுபோல் தான் பாடங்கள் நடத்தப்படுகின்றன, அதற்குப் பிறகுதான் வழக்கமான தேர்வு முறைக்கு மாணவர்களைத் தயார்ப்படுத்துகின்றனர். பழைய கேள்வித்தாள்களைக் கொடுத்து, குறிப்பிட்ட கால அளவுக்குள் பதில் எழுதப் பயிற்சி கொடுக்கிறார்கள். மனப்பாடம் செய்து எழுதுவதைவிட, புரிந்துகொண்டு பதில் அளிப்பதில் சிறந்து விளங்குகின்றனர். இம்முறையால் தேர்வு பயம் என்பது துளிக்கூட ஏற்படுவதில்லை. ஆங்கில மொழியும் அவர்களுக்குப் படிப்படியாக கற்றுக்கொடுக்கப்படுகிறது. அருகிலுள்ள கிராமங்களிலிருந்து மாணவர்களை அழைத்துவர இலவச வாகன வசதி செய்து கொடுத்துள்ளனர். அனைத்து மாணவர்களுக்கும் பள்ளியிலேயே காலைச்சிற்றுண்டியும், மதிய உணவும் வழங்கப்படுகின்றன. மாலையில் ஒரு கப் பாலுடன் ஏதாவது ஒரு தின்பண்டமும் கொடுக்கிறார்கள்.

இங்கு படித்து வெளியேறும் மாணவர்கள் ஏதேனும் ஒரு தொழிலில் பயிற்சி பெற்று சொந்தக்காலில் நிற்க உதவுவதே இந்தப் பள்ளியின் குறிக்கோளாக உள்ளது. பள்ளி நிர்வாகத்தில் திருமதி பிரேமா ரங்காச்சாரியின் மூத்த மகன் உதவுகிறார். இளையமகனான, திரு. டி.என்.கிருஷ்ணா பிரபல, கர்நாடக சங்கீத வித்வானாக விளங்குகிறார். அவர் வித்யாவனம் மாணவர்களைக்கொண்டு நிறைய இசை நிகழ்ச்சிகளையும் நடத்தி வருகின்றார்.

தகவல் – ஸ்ரீவித்யாமதுரம்

# நமது ஊர்களில் பயன்தரும் மரம் வளர்ப்போம்

## வளர்க்க வேண்டிய நல் மரங்கள்.

| மரங்களின் பெயர் | அதன் பயன்கள் |
|---|---|
| நீரடி முத்துமரம் | எண்ணெய், தோல் நோய்களுக்கு ஏற்றது. உள்ளுக்கும் சாப்பிடலாம். 200 மிலி பாலில் இந்த எண்ணையை 10 சொட்டுக்கள் விட்டு தினமும் காலையில் வெறும் வயிற்றில் தொடர்ந்து பருகிவர நோய்கள் குணமாகும். |
| நீலகிரி தைலமரம் | இலைகளிலிருந்து எடுக்கப்படும் தைலம் நெற்றிப்பொட்டில் தேய்க்க தலைவலி குணமாகும். கண் எரிச்சல், கழுத்துவலி ஆகியனவும் குணமாகும். |
| நுணாமரம் | இலைகளிலிருந்து எடுக்கப்படும் தைலம் நெற்றிப்பொட்டில் தேய்க்க தலைவலி குணமாகும்/ நுணாப்பட்டையை நசுக்கித் தண்ணீரில் கொதிக்க வைத்து இறக்கினால் வெளிர்மஞ்சள் நிறம் வரும். இதில் துணிகளை நனைத்துக் காயவைக்க, துணிகள் மஞ்சள்நிறம்பெறும். இந்தத் துணியைப் பயன்படுத்தினால் கண் நோய் சிறிது தணியும். நுணா மரக்கட்டையில் மிதியடி செய்து அணிவதால் கண்நோய்கள் வராது. கெண்டைக்கால்வலியும், பாதங்களில் பித்த வெடிப்பும் ஏற்படாது. |
| மருதமரம் | இலைகளை அரைத்துப் பித்தவெடிப்புக்கு பற்றுப்போடலாம். 5கிராம் இலையை 100 மிலி பசும்பாலில் அரைத்து இரு பங்குகளாக்கி காலை, மாலை உட்கொள்ளவும் இது போல தொடர்ந்து 8 நாட்களுக்கு உட்கொள்ள உடம்பில் ஏற்படும் அரிப்பு, சொறி, பித்தவெடிப்பு ஆகியவை குணமாகும்.(மருந்துண்ணும் நாட்களில் மிளகுப் பொங்கல் மட்டும் உணவாகக் கொள்ளலாம்.) |
| வில்வமரம் | 10கிராம் கொழுந்து இலையை அரைத்து வெறும் வயிற்றில் தொடர்ந்து 15 நாட்களுக்கு உட்கொண்டுவர வெட்டைநோய் தணியும். (மருந்து உண்ணும் நாட்களில் மிளகுப்பொங்கலும், தயிர்சோறும் மட்டுமே சாப்பிடவும்) |
| மருதோன்றிமரம் | இலையை மைபோல் அரைத்து, கட்டிகளின் மேல் பற்றுப்போட குணம் பெறலாம். தேமல் நோய்கள் குணமாகும். இலையைச் சிறிதளவு எலுமிச்சைப்பழம் சாறுவிட்டு அரைத்து உள்ளங்கால்காலில் பூசிவர உள்ளங்கால் எரிச்சல் தீரும். 100 கிராம் இலையுடன் 25 கிராம் கரிசலாங்கண்ணி இலையைச் சேர்த்து அரைத்து தலையில் தேய்த்து 10 நிமிடங்கள் கழித்து தலைகுளித்தால் முடி நன்கு வளரும். முடி உதிர்வதும் நிற்கும். பூவின் காம்புகளை நீக்கி விட்டு தலையணையின் அடியில் வைத்துத் தூங்கினால் நல்ல தூக்கம் வரும் |
| மாமரம் | மாங்கொழுந்து இலையை நிழலில் உலர்த்தி மாப்போல இடித்து 90 நாட்களுக்குத் தினமும் காலை உணவுக்கு முன்னரும் மாலை 6 மணியளவிலும் 5கிராம் எடையளவு உட்கொண்டு வந்தால் நீரிழிவு நோய் குணமாகும். (இந்த மருந்துண்ணும் நாட்களில் கிழங்குகள், கடலைஎண்ணெய்ப் பண்டங்கள் ஆகியவற்றைத் தவிர்க்க வேண்டும்.) மாம்பூவுடன் பச்சைக்கொத்தமல்லி, இஞ்சி, கறிவேப்பிலை ஆகியவற்றை சமஅளவில் சேர்த்து அரைத்துத் துவையல் போல உட்கொண்டு வந்தால் உமட்டல் நீங்கும். மாங்காய் வத்தல் குழம்பு சாப்பிட மலச்சிக்கல் நீங்கும் பசி மந்தத்தை நீக்கும். |
| மாதுளைமரம் | பூ உதிராத மாதுளம் பிஞ்சை அரைத்துத் தயிரில் கலக்கி உட்கொள்ள பேதி நிற்கும். 3 பிஞ்சுகளை அரைத்து 200 கிராம் தயிரில் கலக்கி 2 வேளை உட்கொள்ளவேண்டும். |

தகவல்:- டாக்டர். C.R.L. நரசிம்மன், வேளாண்துறை வல்லுநர், கோவை.

மரம் மேலும் வளரும்



## நற்றவ நளினி காந்த குப்தா

ஸ்ரீஅரவிந்தரின் முதன்மைச் சீடராகிய நளினி தன் குருவின் ஆனந்த பிரம்மத்தின் மறுவடிவம் என்பதால் அவருடைய ஆனந்தத்தை ஒரு சிறிதளவாவது வெளிப்படுத்த வேண்டும் என்பதே பொருத்தமானது.



தன் பிற்கால வாழ்க்கையில் வியத்தகு இமாலயச் சிகரங்களை ஒத்த உயர்நிலைப் புன்முறுவல், கேலி மற்றும் சிரிப்பு வானவில்லின் வர்ண ஜாலங்களை வெளிப்படுத்தியது. நாமனைவரும் நளினியின் உள் இழுக்கப்பட்ட உள் அமைந்த கவனக் கூர்மையான தனித்தன்மையைக் கண்டுள்ளோம். இதனால் தேவையற்ற ஊடுருவல்கள் தவிர்க்கப்பட்டன என்பது உண்மை. ஆனால் அவர் தம் மனத்தில் ஒத்துக்கொள்ளப்பட்ட நண்பர் வட்டத்தினரிடம் ஒரு நண்பராக, இளைஞர்களுக்குத் தாத்தாவாக, முதியோர்களுக்கு அண்ணனாக வாழ்ந்து வந்தார். அவர்களிடையே ஒரு தொடர்ந்த இலகுவான இயக்கங்களுக்கும் மேலும் கவலைகள் அற்ற சிரிப்பலைகளுக்கும் இடையே வாழ்ந்து வந்தார்.

ஒரு நாள் இரு ஆசிரமவாசிகளிடையே சூடான விவாதம் நடைபெற்றது. வேறுபட்ட கருத்துகளை நளினி குறிப்பிட்டதைப் பற்றி விவாதம் செய்தனர். ஒவ்வொருவரும் தம் கருத்தே சரி என வாதிட்டனர். கடைசியாக நளினியிடமே சென்று உண்மையைக் கண்டுபிடிப்பது என முடிவு செய்தனர் நளினி இருவர் சொல்வதையும் கேட்டுக்கொண்டார். பின்னர் கூறினார் “நளினி கூறியவை மிக முக்கியமல்ல. அவர் கூறாமல் விட்டதே மிகவும் முக்கியம்“.

அந்த நாட்களில் x என்பவர் சைக்கிளில் ஆசிரமத்திற்கு வருவார். நளினியுடன் சேர்ந்து விளையாட்டு அரங்கிற்கு தத்தம் சைக்கிள்களில் செல்வர். ஒரு நாள் வழக்கம்போல நளினியுடன் சேர்ந்து செல்ல ஆசிரமம் வந்ததும், நளினி சொன்னார்“. நான் வர மாட்டேன் எனக்குப் பதவி உயர்வு கிடைத்துள்ளது.“

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள்“ என x புரியாமல் கேட்டார். “ஸ்ரீஅன்னை கூறியுள்ளார் நளினி மீண்டும் சைக்கிளில் வரவேண்டாம் ஒரு காரைப் பயன்படுத்தவும்“.

முந்தைய நாள் ஒரு சில குழந்தைகள் அவர் சைக்கிளைத் தெரியாமல் இடித்துத் தள்ளியதால் இந்தப் பதவி உயர்வு வழங்கப்பட்டது.!

ஒரு நாள் நளினி அணிய இயலா, நாள் பட்டதனால் பழுப்பு நிறம் கண்ட சட்டை ஒன்றை அணிந்திருந்தார். வேஷ்டி பளீரென்று வெள்ளையில் மின்னியது அனைவரும் இவ்விரண்டும் பொருந்தவில்லை என்றனர். நளினி கூறினார். “சட்டையைப் புதுப்பிக்க வழியே இல்லை. எனவே மண்ணில் புரண்டு வேஷ்டியை இதற்குச் சமமாக மாற்ற வேண்டியதுதான்“. அனைவரும் சிரிப்பலையில் மூழ்கினர்.

– ஸ்ரீஅரவிந்தரின் மானச புத்திரன் – நளினி காந்த குப்தா.
ஆசிரியர் – சியாம்குமாரி
வெளியீடு – அரவிந்தர் பக்தர் பிரார்த்தனைக் குழு
கோயமுத்தூர்.
பதிப்பு – 2004

## செய்தித்துளிர் !

இளைஞர்கள் கல்வி மையத்தில் கோடைகாலச் சிறப்பு முகாம் நடைபெற்று வருகிறது. இதில் ஆரோவில்லில் பணிபுரியும் ஊழியர்களின் குழந்தைகள் பயிலுகின்றனர். யோகா, இசைப்பயிற்சி,



கைத்தொழில், ஓவியம், மொழிப்பயிற்சி, குழு விளையாட்டு போன்றவற்றில் செயல்திறன் பெறுகின்றனர். செங்கல்பட்டு ஸ்ரீஅரவிந்தர் அன்னை மையம், ஆரோவில் அருள்வழி மாணவர்கள் நம் பயனாளிகளுடன் கலந்துரையாடல் பகிர்வு செய்துகொண்டார்கள். பிறபள்ளி ஆசிரியர்களும் பார்வையாளர்களாக வந்திருந்து கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்கிறார்கள். மாணவமணிகள் (பழைய செய்தித்தாளிலிருந்து) தயாரித்துள்ள கூடைகள், காய்ந்த குப்பைகளைச் சேகரிப்பதற்குப் பயன்பாட்டிற்கு வந்து விட்டன.

# ஸ்ரீஅரவிந்தர் – 150... நோக்கி

ஆரோவில் தில்லைகணபதி படைத்தளிக்கும் அரவிந்தம்

தம்பி பரீனுக்கு
மலை உச்சம்
பாலை வெப்பம்
விஷக்காய்ச்சல்
மருந்துகள்
குணப்படுத்த
மறந்தன.
அவ்வழி போன
நாக சன்னியாசி
ஒரு குவளை நீரில்
ஒரு கத்தியால்
கீறி அதில்
மந்திரத்தை
நுழைத்தார்
நீரைப்பருகிய
பரீனின் காய்ச்சல்
காணாமல் போனவர்
பட்டியலில்
சேர்ந்தது.
இந்த அதிசயக் காட்சியை
அரவிந்தரின்
ஆன்மிகத் தொலைக்காட்சி
பதிவு செய்தது
அதனால் அவரது
வாழ்க்கையே யோகமானது.
..

(மேலும் மலரும்)

## செய்தித்துளிர் II

புதுவை வைத்திக்குப்பத்தில் அமைந்துள்ள ஆரோதன் கலைக்கூடத்தில் புதுவை இலக்கியப் படைப்பாளிகள், கலைஞர்கள் அமைப்பின் சிறப்பு நிகழ்வுகள் மேமாதம் 29இல் நடைபெற்றன. 'புதுச்சேரியில் ஸ்ரீஅரவிந்தர்' எனும் பொருளில் பேராசிரியர் பி. ராஜ்ஜா அவர்களும், 'ஸ்ரீஅரவிந்தரும் சுப்பிரமணிய பாரதியாரும்' எனும் பொருளில் ஆரோவில் கவிஞர் இரா.மீனாட்சி அவர்களும் சிறப்புரையாற்றினர். பலமொழிக் கவிஞர்களின் மன்றத்தை திரு. லலித் வெர்மாவும் கவிஞர் சுதீர் சென்னும் வழிநடத்தினர். அருமையான கலைச்சூழல். பங்கேற்றதில் திருப்தி.

# தமிழ்ப் பழமொழிகள்

## பெ

1. பெத்தவ சாபம் பிள்ளைக்குப் பலிக்காது
2. பெய்து விளைகிறது மலையாளச் சீமை; பாய்ந்து விளைகிறது தஞ்சாவூர்ச்சீமை; காய்ந்து விளைகிறது இராமநாதபுரம் சீமை.
3. பெரிய மனிதன் என்று பிச்சைக்குப்போனால், கரியை அரைத்து முகத்தில் தடவினான்.
4. பெருமாள் நினைத்தால் வாழ்வு குறைவா? பிரமன் நினைத்தால் ஆயுசு குறைவா?
5. பெருமைக்கு பில்லு போட்டா– எருமைக்கு வயிறு நிரம்புமா.
6. பெத்த பிள்ளை பின்னுக்கொதவும்; கத்த வித்தை காலத்துக் கொதவும்.
7. பெற்றது எல்லாம் பிள்ளை ஆகுமா? பூத்தது எல்லாம் காய் ஆகுமா?
8. பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு.
9. பிள்ளையாரைப் பிடித்த சனி; அரச மரத்தையும் பிடித்ததை போல.
10. பிள்ளையையும் கிள்ளிவிட்டு, தொட்டிலையும் ஆட்டுவதா?

சு. சண்முகசுந்தரம் – சாகித்ய அகாதெமி வெளியீடு.

### ஸ்ரீஅரவிந்தரின் சிந்தனை மணிகள்

இப்புவியில் எஞ்சியுள்ள இனங்களில், கட்டுரமும் ஆரோக்கியமும் வாய்ந்த உடலைக் கொண்ட இனத்தவர் ஆப்பிரிக்கக் காட்டுமிராண்டிகளே, ஆனால் அவர்களுடைய உடலுணர்வை நாகரிக மனிதரின் மனக் கோணல்கள் மாசுபடுத்திவிட்ட பின், அவர்கள் இச்சிறந்த உடல்நலத்தில் எவ்வளவு காலம் நீடித்திருக்க முடியும்?

**அனைவருக்கும்**
**உலக யோகா தின நல்வாழ்த்துகள்**

சிறுவர் இலக்கியம்

## சிறுவர் நாங்கள்



சின்னஞ் சிறிய சிறுவர் நாங்கள்
சேர்ந்து படித்து மகிழ்கிறோம்
அன்பு உறவில் நண்பராகி
ஒன்று சேர்ந்து கற்கிறோம்.

அன்னைத் தமிழில் கற்று நாங்கள்
அறிவில் உயர்ந்து வளர்கிறோம்
எண்ணம் உணர்வு கொண்டு என்றும்
ஏற்றம் பெற்று வாழ்கிறோம்.

**வெற்றிச் செழியனின் மழலையர் மணிப்பாடல்கள் நூலிலிருந்து.**

படித்ததில் ஈர்த்தது

## பரிசு காத்திருக்கு

பிறருக்கு உதவி செய்வதில் முதல் ஆளாக இருப்பவன் அமீர். இவனது அம்மாதான் அதற்குக் காரணம். பிறருக்கு உதவினால் இறைவனின் அன்பைப் பெறலாம் என்பதைக் குழந்தை பருவத்திலேயே அவனுக்கு விதைத்துவிட்டார். கல்லூரிப் படிப்பை முடித்த அவன் வேலை தேடிக்கொண்டிருந்தான். ஊடகத்துறையில் பணிபுரிந்தால் பலருக்கு உதவலாம் என்பது அவனது எண்ணம். அது போலவே பத்திரிகை நிறுவனத்தில் இருந்து நேர்காணலுக்கு அழைப்பு வந்தது. நேர்முகத் தேர்வன்று அம்மாவிடம் ஆசிபெற்று சீக்கிரமாகப் புறப்பட்டான். வழியில் வயதான ஒருவர் தன் கார்டயரைப் பார்த்தபடி நின்றிருந்தார். அவர் அருகில் அவன் சென்றபோது. "டயர் பஞ்சராகிவிட்டது. பக்கத்தில் மெக்கானிக் ஷாப் இருக்கா? எனக் கேட்டார். "ஐயா மெக்கானிக் ஷாப் இல்லை. வேண்டுமானால் நான் சரி செய்கிறேன்" என டயரைக் கழற்ற ஆரம்பித்தான். "வேண்டாம் தம்பி, நீங்க ஆபிஸ் போக லேட் ஆயிடும்" என்றார். "ஐயா சீக்கிரமாகவே கிளம்பிட்டேன். இன்னும் நேரம் இருக்கிறது" என சொல்லியபடியே டயரை சரி செய்தான். "தேங்ஸ் தம்பி. இதை வச்சிக்கோங்க" என்று ஐநூறு ரூபாயை நீட்டினார் அவர். "ஐயா... பணம் எல்லாம் வேண்டாம். மனிதாபிமான முறையில்தான் உதவினேன்" என்று புறப்பட்டான்.

அலுவலகம் வந்து சேர்ந்த அமீருக்கு ஆச்சரியம் காத்திருந்தது. நேர்முகத்தேர்வு நடத்துபவரே அந்த வயதானவர்தான். பிறகு என்ன... அமீருக்கு வேலை கிடைத்தது. பார்த்தீர்களா... பயன் கருதாமல் பிறருக்கு உதவுங்கள்.

**-நன்றி: தினமலர் மே 2022 – ஆன்மிக மலர்.**

## வாசகர் குரல்

மேமாதம் இதழில் ஆசிரியர் பக்கத்தில் சுதந்திரப் போரட்டத்திற்காகப் பாடுபட்ட தர்மபுரி தீர்த்தகிரியாரைப் பற்றி செய்திகள் வெளிவந்திருந்தன அபூர்வமான பதிவு.

**புலவர் வில்லியனூர் வெங்கடேசன்.**

## அறிவோம் நம் தமிழ் - IV

### தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

COW

பசு/ஆ
கோ
அருச்சுனி
குரால்
குடஞ்சுட்டு
பெற்றம்
தொறு (பசுங்கூட்டம்)
தேவப்பசு (காமதேனு)
மையா (மலட்டுப்பசு)
கடமா – காட்டுப்பசு.

CRIME

சட்டமீறல்
தீச்செயல்
தீது
புரை
அரலை
பழிச்செயல்

CROW

காக்கை /காகம்
பிள்ளை
சொற்புள்
பகற்குருடு
கரும்பிள்ளை
நைச்சி

நன்றி; ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.




## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

Unit of Sri Aurobindo International Institute of Educational Research

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.